

# திருக்குறள்

**வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்**
**தீமை இலாத சொலல்** *(வாய்மை 291)*

வாய்மைக்கு இலக்கணம் எது என்றால், யாருக்கும் எவ்வகையிலும் தீமை விளைவிக்காத சொற்களைக் கூறுதலே ஆகும்.)

உரை: **கவிஞர் சிற்பி**

# ஆசிரியர் பக்கம்

## உதயநகரிலிருந்து...

ஆரோவில் நகரமே பிப்ரவரி மாதம் முழுதும் விழாக்கோலம் கொண்டிருந்தது. ஸ்ரீஅன்னை பிறந்தநாள் பிப்ரவரி 21. ஆரோவில் நகரம் கால்கோள்நாள் பிப்ரவரி 28 என அந்த வாரம் முழுதும் பலவேறு நிகழ்வுகள் இப்பகுதியில் நிரம்பி வழிந்தன. பசுமை நடை, ஸ்ரீஅரவிந்தரின் 'சாவித்ரி', 'தெய்விக வாழ்வு' நூல்கள் வாசிப்பு, ஓவியக்கண்காட்சி, தியான அமர்வுகள், அருகிலுள்ள கிராமத் தலைவர்களுடன் கலந்துரையாடல்கள், நன்றியளிப்புக் கூட்டங்கள், கலைநிகழ்ச்சிகள், நல்ல திரைப்படங்களின் அரங்குகள், குழுவிளையாட்டுகள், உணர்வுப் பகிர்வுகள், எனப் பலவேறு சங்கமங்கள் நிறைவேறின. அழகும், நட்பும், நல்லுறவின் வெளிப்பாடுகளும் மனம் நிறைந்தன.

ஆரோவில் நகரின் மைய வளையத்திலுள்ள நமது இளைஞர்கள் கல்வி மையம் மெய்யாலுமே பலவகைத் திறனாளிகளின் நடுநின்ற நடுவாக அமைந்து பணியோகத்தில் நிலைத்துள்ளது. ஆரோவில் இளைஞர்கள், மகளிர் கலந்துரையாடும் களமாகவும், கிராமப் பெரியவர்கள் இணைந்து பேச ஒரு தளமாகவும் பொலிவு பெற்றிலங்குகிறது. புதியவர்கள், விருந்தினர்கள் வந்து செய்தி சேகரித்துச் செல்லும் தகவல் மையமாகவும் தற்போது பெரும் பெயர் பெற்றுள்ளது. அலுவலகத்தில் சகோதரர் அய்யனார், தோட்டத்தில் திருமதி சக்குபாய், சமையல் கூடத்தில் திருமதி திலகவதி, கைவினைப்பொருள் அறையில் திருமதி பச்சையம்மாள், பின்மாலையில் விளையாட்டு மைதானத்தில் அகிலா விஷ்வா இணையர் – விருந்தினரை உபசரிப்பதில் புஷ்பா – மகேஸ்வரி தாயும் – மகளும், இவர்களையெல்லாம் நிரல் செய்வதில் திருமதி சுமித்ராமனு, மாணவச் செல்வங்களை வழி நடத்துவதில் திரு.பா.ஆனந்து, யோகா வகுப்புகளைச் சீராகக் கொண்டு செல்வதில் திருமிகு முத்துக்குமாரி, திங்கள்தோறும் இருநாட்கள் நம்மிடத்தில் தங்கி சித்தமருத்துவ ஆலோசனைகள் வழங்கும் வேலூர் மருத்துவர் கே.பி. செல்வம், ஆரோவில் செய்திமடலைத் தொகுத்து வடிவமைப்பதில் உற்சாகத்துடன் செயலாற்றும் முனைவர் சொ. அருணன் என நம்மவர்களுடன் புற, அக வளர்ச்சிப் பணிகளில் உறுதுணையாக நிற்கும் இணைஆளுமைகள் நமது அமைதிக்குரல் நட்பு வட்டத்தினரும் நம்மை மேன்மைப்படுத்தி வருகின்றனர். நீங்களும்தான் வாசகர்களே!

அனைத்திற்கும் மேலாக இந்த ஆண்டு ஸ்ரீஅரவிந்தர் – 150, செம்மல் வ.உ.சி-150, நேதாஜி-125, பாரத சுதந்திர அமிர்தப் பெருவிழா - 75 ஆரோவில் - 54 என்று பிறந்த ஆண்டு விழாக்களுடன் பாரதியார் நினைவேந்தல் - 100 என நாம் ஒவ்வொரு நிலைநின்றும் செயல் விழாக்களை முன்னெடுத்துச் செல்லும் முனைப்பில் நம்மையும் உயர்த்திக்கொள்கிறோம்...... ஓம்........ ஒளிவட்டத்தில் அடுத்த தலைமுறையும் வந்து சேர்ந்து கொள்ள ஆவலுறுவதையும் உணர முடிகிறது. நமது நல்லெண்ணங்களின் வெள்ளியலைகள் கரைகளை இணைத்து மேற்செல்லும்போது தொடுவானம் பொன்மயமாகத் தெரிகிறது. மார்ச் மாதம் 29 ஸ்ரீஅன்னை ஸ்ரீஅரவிந்தரை முதன்முதலாகச் சந்தித்த தரிசன நாள். எத்தனை அற்புதங்கள்?

மெதுவே மரம் செடிகள் பூக்களை அரும்பெடுத்து தீர்த்தவாரி உற்சவத்துடன் வசந்தகாலம் வண்ண மயமாக மண்ணை நிரப்பும் மகிழ்ச்சியான தருணத்தில் நாம் ஒருவரையொருவர் நல்எண்ணத்தால் நிரப்பிக் கொள்வோம்; வாழ்த்திக்கொள்வோம்; நலம் பாராட்டுவோம்.



உதயநகரிலிருந்து அன்புடன்
இரா.மீனாட்சி.

# அன்னையின் பிரார்த்தனை



*எம்மனே, என் சிந்தனையில் எப்போதும் இரு. நின் ஸாநித்யம் எப்போதுமாய் உளது என்பதும் ஈசத்வம் வாய்ந்ததென்பதும் எனக்குத் தெரிந்ததுதான், எங்கள் பார்வைக்கெட்டிய யாவும் எங்கள் பார்வைக் கெட்டாதவையும் உள்ளபடி உள்ளதின் காரணம் நின் அதிசய ஆக்ஞையாலும் நின் அன்பாலேயுமே என்பதும் எனக்குத் தெரியும். இருந்தும் என் உள்ளத்தில் என்றுமாய் நிலைத்திரு என்று மீண்டும் மீண்டும் சொல்வது என் மனதை நின் ஞானத்தில் திடப்படுத்திக்கொள்வதற்கும், நின்னை நான் மறவாதிருப்பதற்கும், நான் நின்பால் அசட்டையாக இல்லாதிருப்பதற்குமே ஆகும்.*

*ஓ எல்லாவற்றிற்கும் முழுமையாக ஒளி தந்து, அவற்றிற்கு திருஉரு தரும் அளவுக்கு நான் நின் அன்பாகவே ஆவேனாக ஒவ்வொருவருள்ளத்தும் அமைதியும், கருணை நிறைந்த திருப்தியும் ஜனிக்கவைக்கும் அளவுக்கு தூயதும் தீர்க்க திருஷ்டியுள்ளதுமான நின் திவ்ய அன்பாகவே நான் ஆகிவிட அருள். எங்கும் எப்போதும் நான் இருக்கவும் அருள்.*

**ஸ்ரீஅன்னை**

### அமரர் பாவலர் தங்கப்பா பாடல்

(மார்ச்-8 பாவலர் தங்கப்பாவின் பிறந்தநாளும் கூட)



### பெண்மை ஆள்க!

பெண்மையே ஆண்டிடல் வேண்டும் – உலகைப்
பெண்மையே ஆண்டிடல் வேண்டும்
உண்மைசொன் னேன்உல குய்ந்திட வேண்டில்
பெண்மையே ஆண்டிடல் வேண்டும்.
தண்மை மிகுந்தது தாய்மை – நல்
தாய்மையில், அன்பினில் வாழ்வது சேய்மை
வண்மை மிகுந்தது தாய்மை – உயிர்
வாழ்ந்திடத் தன்னையே ஈயும்அம் மேன்மை!
வன்மையும் போர்களும் தீதும் – பழி
வாங்கும் அழிவும் கொடுமையும் யாதும்
வெம்மை மிகுந்திடும் ஆண்மை – தன்
வீறு விளங்கிடச் செய்திடும் கீழ்மை.
பொறுப்பினைப் பெண்களுக்குக் கீந்தே – அவர்
புனைந்திடும் சட்டங்கள் திட்டங்கள் சார்ந்தே
விருப்பொடும் ஆடவர் நின்றால் – பகை
வீழ்ந்திடும் அன்பில் உலகமே ஒன்றாம்.

**நன்றி:- பாவலர் தங்கப்பாவின் மக்கள் த.மின்னல்பெருமாள், த. செங்கதிர் த.விண்மீன் பாண்டியன்**

### வாசகர் குரல்

அன்புள்ள ஆசிரியருக்கு வணக்கம். பிப்ரவரி 2022 இதழ் கண்டு மகிழ்ந்தேன். நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் என்ற பெயரைக் கேட்டாலே, சோர்ந்து கிடக்கும் நரம்புகளெல்லாம் புதுமுறுக்கேறும் பாரதத்தாயின் வீரப்பெருமகனின் நிழலில், இந்திய தேசிய இராணுவப் பெரும்படையில் தங்களையும் பதிவேற்றம் செய்துகொள்ளும் பேறுபெற்றுள்ள தங்களுக்கும், தம்பி அருணனுக்கும், பெருமிதம் பொங்கும் பாராட்டுகள்! நேதாஜியின் ஆன்மா, இருவரையும் அரவணைத்து வாழ்த்தியிருக்கும்!. திருநெல்வேலி கோவிலுக்கு உணர்வுபூர்வமாக, என்னையும் உடன் அழைத்துச் சென்றமைக்கு மிக்க மகிழ்ச்சி. உங்களுடன் நெல்லையப்பர் காந்திமதியம்மன் தரிசனம் செய்தேன்..

**முனைவர் அ. பாண்டியன் ஐயா, சிங்கம்புணரி.**

## மௌனமொழி பேசும் மனிதர்கள்

பாலி நாட்டில் உள்ள ஒரு கிராமம் பெங்கலா. இங்கு சுமார் 3000 மக்கள் வசிக்கின்றனர். இவர்கள் மத்தியில் பேச்சு வழக்கில்லை; 'கடா கோலாக்' என்ற நூற்றாண்டுப் பழமையான சைகை மொழியே வழக்கத்திலுள்ளது, இங்கே காது கேட்காத, வாய் பேச முடியாதவர்களை மிகவும் உயர்வாக மதிக்கிறார்கள். உலகத்திலேயே காதுகேட்காதவர்கள் அதிகமுள்ள இடமாக இந்தக் கிராமம் உள்ளது, இவர்கள் குழந்தைப்பருவம் முதலே சைகை மொழியை எளிதாகக் கற்றுக்கொள்கிறார்கள். குறைபாடு உள்ளவர்களை ஏளனமாகவோ, குறைவாகவோ பார்க்கும் குணம் இவர்களிடத்தில் இல்லை. அதனால் உடற்குறைபாடுகள் இருந்தாலும் யாரும் தங்கள் குறைகளைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. இவர்கள் வணங்கும் கடவுள் தேவா லோக் கொடுத்த பரிசாகத்தான் அவற்றைக் கருதுகின்றனர். பள்ளிகளிலும் மொழிப்பாடங்களோடு, சைகை மொழியும் ஒரு பாடமாக உள்ளதால் அருகிலுள்ள கிராமத்து மாணவர்களும் இந்த மொழியைக் கற்றுக்கொள்கின்றனர்.

நம் நாட்டில் மும்பையில் உள்ள ஓர் உணவகத்தில் சைகைமொழி மூலம் உணவு வழங்கப்படுகிறது. இதில் பணியாற்றுபவர்களில் பலருக்குக் காது கேட்காத, வாய் பேசமுடியாத குறைபாடுகள் உள்ளன. அவ்வாறு இருந்தும் சைகை மொழிமூலம் சொல்லி வரும் விருந்தினர்களுக்குத் தேவையான உணவு வகைகளை, எந்தக்குறையுமின்றி வழங்கி வருகின்றனர். உணவு சாப்பிட வருபவர்களை வரவேற்கையிலேயே அங்கு வைத்திருக்கும் உணவுப் பட்டியலைப் பார்த்துச் சைகையில் உணர்த்தினால் போதுமானது. அந்த உணவுகள் தயாரிக்கப்பட்டு வழங்கப்படுகின்றன. மற்ற உணவகங்களில் உள்ள இரைச்சல், சப்தம் போன்ற எவ்வித இடையூறுகளும் இங்கு இல்லை என்பதுதான் சிறப்பு! உணவு சாப்பிட்டு முடிந்ததும் விருந்தினர் ஒரு விரலை தமது கன்னத்தில் வைத்தால் போதும் சாப்பிட்டாயிற்று என்பதனை உணர்த்திவிட முடியும். இதுபோன்ற உணவகங்கள் மும்பையிலேயே 21 இடங்களில் தொடங்கப் பெற்றுள்ளன. அடுத்து, பெங்களூரிலும், துபாயிலும் துவங்குவதற்கான ஏற்பாடுகளும் நடைபெற்றுக்கொண்டிருக்கின்றன என்று சொல்கிறார்கள்.

**தகவல் – சுகாசினி வெங்கடேசன், இராயப்பேட்டை.**

**மார்ச் - 8 உலக மகளிர் தின வாழ்த்துகள். மகளிரைக் கொண்டாடும் ஆண்களுக்குப் பாராட்டுகள். மகளிரின் மேம்பாட்டிற்காக உழைத்திடும் மெய்த்தொண்டர்களுக்குக் கைகூப்பு.**

கட்டுரை

## நம் மையத்தின் கல்வி, சமூக செயல்பாடுகளுக்கு உறுதுணையாக அமையும் ஸ்ரீஅரவிந்தரின் கல்விக்கொள்கை.

மெய்யான கல்வியின் முதலாவது அடிப்படைக் கொள்கை எதையும் கற்பிக்க முடியாது என்பதேயாகும். ஆசிரியர், பாடங்களை எடுத்துச்சொல்லும் அறிவுரையாளரோ, வேலை வாங்கும் மேலாளரோ அல்லர், அவர் உதவியளித்து வழிநடத்துபவர் ஆவார். கருத்துக்களைச் சுட்டிக்காட்டுவதே அவருடைய பணியாகும், அவற்றை வலியச் சுமத்துவதன்று உண்மையில் ஆசிரியர் மாணவனின் மனத்துக்குப் பயிற்சியளிப்பதில்லை மாணவன் தன் அறிவுச்சாதனங்களை எவ்வாறு செம்மைப்படுத்திக் கொள்ளலாம் என்பதை அவனுக்குக் காட்டி, அதில் அவனுக்கு ஆதரவளித்து ஊக்கமூட்டுகிறார். ஆசிரியர் மாணவனுக்கு அறிவைக் கொடுப்பதில்லை அவன் எவ்வாறு தன் முயற்சியால் அறிவை எய்தக்கூடும் என்பதை அவனுக்குக் காண்பிக்கிறார். ஆசிரியர் உள்ளிருக்கும் அறிவை வெளிக்கொணர்வதில்லை; அறிவு எங்கே புதையுண்டு கிடக்கிறது என்பதையும், அதை எவ்வாறு மேற்பரப்பிற்கு அடிக்கடி எழுந்து வருமாறு பழக்கப்படுத்தலாம் என்பதையும் அவர் அவனுக்குக் காண்பிக்கிறார். மாணவனுடைய இளமைப் பருவத்திலும் அவன் வளர்ச்சியடைந்த பின்னரும்தான் மேற்கூறிய தத்துவம் பின்பற்றத்தக்கது, குழந்தைப்பருவத்திற்கு அது பொருந்தாது எனக் கூறுவது, பிற்போக்கான மதியற்ற கோட்பாடாகும். குழந்தையோ வளர்ந்தவனோ, பையனோ பெண்ணோ, சிறந்த கல்விக்கான சரியான கொள்கை இதுவேயாகும். எவ்வளவு உதவியும் வழிகாட்டுதலும் தேவையாக இருக்கும் என்பது வயதைப் பொறுத்து வேறுபடக்கூடும். ஆனால், அந்த உதவி அல்லது வழிகாட்டலின் தன்மை வயதைப் பொறுத்து மாறுவதில்லை.

கல்வியின் இரண்டாவது கொள்கை ஒரு மனத்தின் வளர்ச்சியைப்பற்றி அம்மனத்தைக் கலந்தாலோசிக்க வேண்டும் என்பதாகும். பெற்றோர் அல்லது ஆசிரியர் குழந்தையை வலுக்கட்டாயமாகத் தம் விருப்பத்திற்கேற்றவாறு உருவமைக்க முயலுவது, மூடநம்பிக்கையாலும் அறியாமையாலும் விளையும் பண்பற்ற செயலாகும். குழந்தை தன் இயல்புக்கேற்றவாறு தானாகவே விரிவடையுமாறு ஊக்குவிக்கப்படவேண்டும். தம் குழந்தை சில குறிப்பிட்ட குணங்களை, ஆற்றல்களை, கருத்துகளை, அறப்பண்புகளை வளர்த்துக்கொள்ள வேண்டும் என்று பெற்றோர் முன்பிருந்தே முடிவு செய்து கொள்வதைவிட பெருந்தவறு ஒன்று கிடையாது. தன் இயல்புக்கு உரிய தர்மத்தைக் கைவிடுமாறு ஒருவனை வற்புறுத்துவது, அவனுக்கு நிரந்தரமான தீங்கு விளைவிப்பதாகும். அவனது வளர்ச்சியை சிதைவுபடுத்தி முழுமையற்றதாகச் செய்வதாகும். இது ஒரு மனித ஆன்மாவுக்கு இழைக்கப்படும் சுயநலமிக்க கொடுமையாகும், நாட்டுக்கு இழைக்கப்படும் ஊறாகும் – ஏனெனில் அம்மனிதன் தனது நாட்டிற்கு அளித்திருக்கக்கூடிய மிகச் சிறந்த பயன்களை நாடு இழக்க நேரிடுகிறது. அவற்றுக்குப் பதிலாக முழுமையற்ற, செயற்கையான, இரண்டாந்தரமான, அக்கறையற்ற சாதாரணப் பயன்களே நாட்டுக்கு கிடைக்கின்றன. ஒவ்வொரு மனிதனிடமும் தெய்விகத் தன்மையுடைய ஏதோ, அவனுக்கே உரிய ஏதோ, அவனுள் இருக்கின்றது; அவன் முழுமையடையவும் வலிமையடையவும் இறைவன் அவனுக்கு அளிக்கும் ஒரு வாய்ப்பு அவனுள் இருக்கின்றது – அம்முழுமையும் வலிமையும் எவ்வளவு சிறு களத்தைச் சார்ந்தவையாக இருப்பினும், அவ்வாய்ப்பை அவன் ஏற்க மறுப்பினும் அவனுள் அவ்வாய்ப்பு இருக்கவே செய்கின்றது. உள்ளிருக்கும் தெய்விகத் தன்மையுடைய அவ்வாய்ப்பைக் கண்டுபிடித்து, அதைப்பேணி வளர்த்துப் பயன்படுத்துவதே செய்யவேண்டிய செயலாகும். உள்ளிருக்கும் மிகச் சிறப்பானவற்றை வெளிக் கொணர்ந்து, அவற்றை முழுமையடையச் செய்து, ஓர் உயரிய பணியில் அவற்றைப் பயன்படுத்துவதில் வளரும் ஆன்மாவுக்கு உதவுவதே கல்வியின் தலையாய நோக்கமாக இருக்கவேண்டும்.

கல்வியின் மூன்றாவது கொள்கை, அருகிலிருப்பதை அடிப்படையாகக்கொண்டு, அதிலிருந்து தொலைவி லிருப்பதை நோக்கிச் செல்வதாகும். ஏற்கனவே கைவசமிருப்பதைக் கொண்டு இனி வரப் போவதைச் செயற்படுத்துவதாகும். ஒரு மனிதனின் இயல்பு கிட்டத்தட்ட விதிவிலக்கேயின்றி, அவனுடைய ஆன்மாவின் கடந்த காலத்தை மட்டுமின்றி, அவனுடைய மரபு, சூழல், நாடு, வட்டாரம், அவன் வாழும் நிலம், அவன் சுவாசிக்கும் காற்று, அவனுக்குப் பழகிப்போன பழக்கங்கள், காட்சிகள், ஒலிகள் ஆகியவற்றையும் அடிப்படையாகக் கொண்டதாகும். இவையெல்லாம் அவனது உணர்வுக்கு எட்டாத விதத்தில், ஆனால் மிகுந்த ஆற்றலுடன் அவனை உருவாக்குகின்றன. நமது கல்விப் பணியும் இவற்றிலிருந்தே தொடங்கவேண்டும். ஒருவனுடைய இயல்பு எந்த நிலத்தில் உயிர் வாழ்ந்து வளர வேண்டுமோ அந்நிலத்திலிருந்து அதை வேரோடு பிடுங்கி விடுதல் கூடாது. ஒருவனுடைய உடல் எந்த இடத்தில் வாழவேண்டுமோ அந்த இடத்திற்குப் புறம்பான கருத்துக்களிலும் கற்பனைகளிலும் அவனது மனத்தை மூழ்கடிக்கக் கூடாது. வெளியேயிருந்து கொண்டுவரத்தக்கது ஏதாவது இருந்தால், அதை மனத்திற்கு முன் வைக்கவேண்டும். அதன்மீது வலியச் சுமத்தக்கூடாது. இயல்பான, சுயமான வளர்ச்சியே மெய்யான முன்னேற்றத்திற்கான நிபந்தனையாகும். தம் சூழலுக்கெதிராக இயல்பாகவே புரட்சி செய்கின்ற வேறு காலத்தையும் வேறு தேசத்தையும் சேர்ந்தவர்களெனத் தோன்றுபவர்களும் உண்டு; இத்தகையோர் தம் இயல்பான விருப்பத்திற்கேற்பத் தடையின்றிச் செல்லட்டும். ஆனால் பெரும்பாலானோர் தமக்குப் புறம்பான, அயலானதோர்



# நமது ஊர்களில் பயன்தரும் மரம் வளர்ப்போம்

## வளர்க்க வேண்டிய நல் மரங்கள்.

| மரங்களின் பெயர் | அதன் பயன்கள் |
|---|---|
| குங்கிலிய மரம் | குங்கிலியப் பிசின் பொடி உள்வியாதிகளுக்கு அரிய மருந்து, உடல்வலிமை அதிகரிக்கும், குங்கிலியத்தூள் புகை மணம் தரும். கொசுத்தொல்லை நீக்கும். திருக்கோவில் வாசனைத்திரவியங்களில் முக்கியமானது |
| குடசப்பாலைமரம் | பட்டையிலிருந்து தயாரிக்கப்படும் மருந்து உள்பிரச்சினைகளுக்குத் தீரவு தரும். |
| கூந்தல் பனைமரம் | பதநீர் தயாரிப்பார்கள், இதில் செய்யப்படும் சர்க்கரை வயிற்றுப்புண் ஆற்றவல்லது. |
| கொய்யாமரம் | இலை, காய், பழம் எல்லாமே சிறப்பு, எளிமையாகக் கிடைக்கக்கூடியது. சத்து நிரம்பியது. |
| சண்பகமரம் | முற்றாத இலைச்சாறு தேனுடன் கலந்து சாப்பிட வயிறு தொடர்பான சிறு நோய்கள் குணமாகும். துளிர், பூ, விதை, பட்டை எல்லாமே மருத்துவகுணமுடையன. |
| சந்தனமரம் | இளம் இலைகளை அரைத்துப்பூசிக் குளிக்க உடல் நாற்றம் போகும். இலையைக் கொதிக்கவைத்து ஆறியபின் குடித்தால் உணவுச் சேராமல் ஏற்படும் ஒவ்வாமை குணமாகும். சந்தனக்குச்சிகளால் உண்டாக்கும் புகை கொசுத்தொல்லை போக்கும், சந்தனமரக்காற்று மூச்சுத் தொடர்பான நோய்களைக் குணப்படுத்தும். |
| சரக்கொன்றைமரம் | இலையை அரைத்து உடல் வீக்கங்களுக்கு போடலாம். அரைத்து வேப்ப எண்ணெயுடன் கலந்து சுளுக்கு, வீக்கம், தடிப்பு, முதலியவற்றிற்குப் பற்றுப்போடலாம். இலையைப்புளியுடன் அரைத்து துவையலாகச் சாப்பிட மலச்சிக்கல் நீங்கும். பூ, காய், (புளி) வேர்ப்பட்டை எல்லாமே நல்ல மருந்துகள் செய்ய உதவுகின்றன. |
| சாதிக்காய் மரம் | சாதிக்காய் தூள் தயிருடன் சாப்பிட பேதி நிற்கும். சாதிப்பத்திரி வெற்றிலைபாக்குடன் போட வாய்நாற்றம், குமட்டல், அஜீரணம் சரியாகும். காய், பட்டை குளியலுக்கு ஏற்றவை. |
| சேராங்கொட்டை மரம் | கொட்டையிலிருந்து எடுக்கப்படும் பருப்பு அருமருந்து, புற்றுநோய், நீரிழிவு மட்டுமல்லாது எய்ட்ஸ் போன்ற நோய்க்கொல்லிகளுக்கும் உற்ற மருந்து. |
| தான்றிக்காய்மரம் | காய் ஜீரணசக்திக்கு உதவும், மலச்சிக்கல் தீர்க்கும். காயை உலரவைத்துப் பற்றுப் போட மூட்டுவலி, உள்ளங்கால் எரிச்சல் நீங்கும். தூக்கம் வருவதற்கு உதவும். மருந்தும் செய்யலாம். |
| தென்னைமரம் | கட்டுமானத்திற்குக் கீற்று, தென்னம்பாளை, குருத்து, தென்னங்கள் தரும். சர்க்கரை தயாரிக்கலாம். |

தகவல்:- டாக்டர். C.R.L. நரசிம்மன், வேளாண்துறை வல்லுநர், கோவை.

மரம் மேலும் வளரும்

வடிவத்தில் செயற்கையாக உருப்படுத்தப்பட்டால், நலிவுற்று, வெறுமையடைந்து, போலி மனிதராகி விடுகின்றனர். குறிப்பிட்டதொரு காலம், நாடு, சமூகம், ஆகியவற்றுக்கு உரியவராக அவர்கள் இருக்கவேண்டும் என்பதும், கடந்த காலத்தின் பிள்ளைகளாக, தற்காலத்தின் உடைமையாளர்களாக, எதிர்காலத்தைப் படைப்பவர்களாக அவர்கள் விளங்கவேண்டும் என்பதும் இறைவனின் ஏற்பாடாகும். கடந்த காலம் நமது அடிப்படையாகும். தற்காலம் நம் கையிலிருக்கும் பொருளாகும், எதிர்காலம் நம் இலக்காகும், சிகரமாகும். தேசியக் கல்வியமைப்பில் இம்மூன்றும் தமக்குரிய இயல்பான இடத்தைப் பெறவேண்டும்.

**நூல்: கல்வி, ஸ்ரீஅரபிந்தோ ஆசிரமம் வெளியீடு, புதுச்சேரி.**



மரம், தாவரம் மண்தாய் தந்த வரம்!

# காந்தியை விஞ்சிய காந்தியவாதி

படித்ததில் ஈர்த்தது



வாடகை செலுத்தாத 94 வயது முதியவர் ஒருவரைத் தனது வீட்டிலிருந்து வெளியேற்ற முடிவு செய்த அந்த வீட்டின் உரிமையாளர் , அந்த முதியவர் பயன்படுத்திய பழைய கட்டில், சில அலுமினிய பாத்திரங்கள், தட்டு குவளைகளை வீட்டிற்கு வெளியே போட்டு விட்டார்.

சிறிது காலஅவகாசம் தருமாறு எவ்வளவோ கெஞ்சிப் பார்க்கிறார் முதியவர். வேடிக்கை பார்த்த சிலர் பரிதாபப்பட்டு சிறிது காலஅவகாசம் தரச் சொல்ல – வேண்டா வெறுப்பாக அந்த முதியவரின் சாமான்களை மீண்டும் அனுமதித்தார் உரிமையாளர்.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த அவ்வழியே சைக்கிளில் சென்ற பத்திரிக்கையாளர் ஒருவர், அந்தக்காட்சிகளைப் படமெடுத்து, தனது பத்திரிக்கையில் வெளியிட நினைத்து – “கொடூர நிலக்கிழார், பரிதாப நிலையில் முதியவர்” என்றெல்லாம் தலைப்பு ரெடி செய்து, பத்திரிக்கை ஆசிரியரிடம் சென்று, நடந்தது குறித்து விளக்கமளித்து, படங்களைக் காட்டினார்.

படங்களைப் பார்த்த ஆசிரியர், அதிர்ந்து போனார். “இவர் யாரென்று தெரியுமா?” எனச் செய்தியாளரைக் கேட்க – தனக்கு எதுவும் தெரியாது என்றார் செய்தியாளர். “இந்தியாவில் இரண்டு முறை இடைக்காலப் பிரதமராக இருந்த குல்சாரிலால் நந்தாதான் அவர். நேரு இறந்த போதும், சாஸ்திரி இறந்த போதும், இவரைத்தான் பிரதமராகத் தேர்ந்தெடுத்தார்கள். பொருளாதாரம் படித்த சிறந்த தொழிற்சங்கவாதி. HMSS தொழிற்சங்கத்தில் அகில இந்தியத் தலைவராக இருந்தவர். 1948ல் இவரது தலைமையில்தான் கொல்கத்தாவில் INTUC திறப்பு விழா கண்டது. பல காலம் மத்திய அமைச்சராக இருந்தவர்” என்றார்.

ஆக, பத்திரிக்கையில் செய்தி வந்தது – அவரது வீட்டின் முன்பு அரசு அதிகாரிகளும், VIP வாகனங்களும் வந்து குவிவதைக் கண்ட வீட்டு உரிமையாளர் மிரண்டு போனார். பிறகுதான் அவருக்கே தெரிந்தது – இருமுறை பிரதமராக இருந்த நந்தாதான் இவர் என்று.

சுதந்திரப் போராட்டத் தியாகியான இவருக்கு ஓய்வூதியமாக முன்பு தந்த 500 ரூபாயையும் வாங்க மறுத்து விட்டார். “சுதந்திரத்துக்காகப் போராடினேனே தவிர இந்த 500 ரூபாய்க்காக அல்ல” என்று கூறிவிட்டார். அதைப்போலவே, “அரசு இல்லத்துக்கு வாருங்கள்” என வந்த அதிகாரிகளும், அரசியல்வாதிகளும் எவ்வளவோ கெஞ்ச, “இந்த வயதில் அந்த வசதியெல்லாம் எதற்கு?”.. என மறுத்தும் விட்டார். இதையெல்லாம் கண்ட அந்த வீட்டின் உரிமையாளர் நந்தாவின் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டார். இறுதிவரை உண்மையான காந்தியவாதியாக, சாதாரண குடிமகனைப் போல் வாழ்ந்த இவருக்கு 1997ல் பாரத ரத்னா விருது வழங்கப்பட்டது.

(முகநூல் பதிவிலிருந்து – சொ.அருணன்)

# தமிழ்ப் பழமொழிகள்

## ப

1. பகல்ல பக்கம் பார்த்துப் பேசு; இரவில் அதுவும் பேசாதே.

2. பகல்ல பசு தெரியலைன்னா, இரவுல எரும தெரியவா போகுது.

3. பங்குனி என்று பருப்பதும் இல்லை; சித்திரை என்று சிறுப்பதும் இல்லை.

4. பச்சை பாண்டத்தில் பாலை வைத்தால் பாலும் உதவாது பாண்டமும் உதவாது.

5. பச்சிலை உரம் பயிருக்குப் பாயாசம்.

6. பசித்தவன் தின்னாததும் இல்லை; பகைத்தவன் சொல்லாததும் இல்லை.

7. பசியாமல் இருக்க மருந்து கொடுக்கிறேன்; பழையது இருந்தால் போடு என்றானாம்.

சு. சண்முகசுந்தரம் – சாகித்ய அகாதெமி வெளியீடு.

## சித்தாஞ்சலி

நமது மூத்த வாசகர் பெங்களூரு பேராசிரியர் முனைவர் மீரா அவர்கள் ஸ்ரீஅன்னை அரவிந்தரின் திருவடியில் இணைந்து விட்டார்கள். அவரது குடும்பத்தினருக்கு நமது இரங்கலைத் தெரிவித்துக்கொள்கிறோம். மீரா அக்காவின் ஆன்மா சாந்திபெற நமது பிரார்த்தனைகள்

புதுதில்லியிலிருந்து வந்த வழக்கறிஞர் மூத்த ஆரோவில்வாசி திரு. சஞ்சீவ் அகர்வால் அமரரானார். அவர் ஆரோவில்லின் வளர்ச்சிப்பணிகளுக்கு ஊக்கம் கொடுத்து வந்தார். ஸ்ரீஅரவிந்தர் பன்னாட்டுக் கல்வி ஆராய்ச்சி மையத்தின் நிர்வாகப்பொறுப்பில் இருந்தார். இடையன்சாவடி கிராமத்தில் உள்ள உதவி ஜென்டிலஸ் மெட்ரிக்குலேஷன் பள்ளியின் பொறுப்பாளராக இருந்து வழி நடத்தி வந்தார். கிராமத்துக் குழந்தைகள் மீது அளவற்ற அக்கறைக்கொண்டு மேற்கல்வி படிப்பதற்கு ஊக்கப்படுத்தினார். ஆரோவில்லின் பல்துறைக் கல்வி வளர்ச்சிக்கும் பொது நிர்வாகத்திற்கும் முன்நின்று சேவை ஆற்றிவந்தார். இப்பொழுது ஸ்ரீஅரவிந்த அன்னையின் மலரடியில் வாசம் செய்கிறார். அமரர் சஞ்சீவ் புகழ் என்றும் நிலைத்திடும். ஓம் சாந்தி.



## மனதை மகிழவைக்கும் உண்மைச் சம்பவம்

ஓர் அழகான சிறுமி தன் கைகளில் இரண்டு ஆப்பிள்கள் வைத்திருந்தாள். அவளின் தாய், “நீ வைத்திருக்கும் இரண்டு ஆப்பிள்களில் ஒன்றை எனக்குக் கொடு” என்றாள். ஒரு வினாடி யோசித்த அந்தச் சிறுமி, பின் ஒரு ஆப்பிளைக் கடித்து விட்டாள். உடனே இரண்டாவது ஆப்பிளையும் கடித்து விட்டாள். தாயின் முகத்தில் இருந்த சிரிப்பு உறைந்து போனது. தன் ஏமாற்றத்தை வெளிப்படுத்தமுடியாமல் தவித்தாள். உடனே அந்தச் சிறுமி, தாயிடம் சொன்னாள் “அம்மா இந்த ஆப்பிள்தான் இனிப்பாக இருக்கு நீ எடுத்துக்க“ என்றாள். நட்புகளே, நீங்கள் யாராக வேண்டுமானாலும் இருக்கலாம். எவ்வளவு அனுபவமும் அறிவு விஸ்தாரமும் பெற்றிருக்கலாம். ஆனால் ஒருவரைப் பற்றிக் கணிப்பதையும். அவரை அறிவதையும் கவனமாகச் செய்யவேண்டும். எதையும் மேலோட்டமாகப் பார்த்துக் கணிக்காமல், அவசரப்படாமல் ஆழ யோசித்துக் கணியுங்கள். மனக்கணக்கு தவறலாம்.. மனிதரைப் பற்றிய கணக்கு தவறக்கூடாது.

– தகவல் – கீழ்ப்புத்துப்பட்டு சுவாமிவிவேகானந்தா கிராம சமுதாயக் கல்லூரி – ஆண்டுவிழாமலர்.

## ஸ்ரீஅரவிந்தர் – 150... நோக்கி

ஆரோவில் தில்லைகணபதி படைத்தளிக்கும் அரவிந்தம்



அப்போலோ பந்தர்
அமைதி அனுபவத்திற்குப் பின்
விந்தை அனுபவங்கள் பல
ஆன்மிகத் தந்தைக்கு
மின்னல் கீற்றாய்
மின்னி விளங்கின
தென்றல் காற்றாய்
தொட்டுப் பார்த்தன
பரோடாவில்
குதிரை வண்டியோடு
ஓடிவரும் விபத்தை
முற்றும் அறிந்த
முக்கண் திறந்த
முனிவராய் அகற்றினார்
யோகி பிரமானந்தரின்
மூடிய நிலை
மோனக்கண்கள்
அரவிந்த ஞாயிறு ஒளிக்கு
மட்டுமே
தரிசனம் தந்தன
புனித நர்மதை
நதியின் ஓரம்
எழுந்தருளிய
காளி கோயிலில்
சிலையாய் நின்றவள்
தன் தலையால்
எட்டிப்பார்த்தாள்.

அச்சிலையின்
உயிர்ப்பை
தெய்வீகத்தை
அரவிந்த காமிராக்கண்கள்
மட்டுமே
படம் பிடித்தன...

(மேலும் மலரும்)

## ஸ்ரீஅரவிந்தரின் பொன்மொழி

பெருந்தன்மையும் தாராள மனப்பான்மையுமே ஆன்மாவின் விண்ணுலக வீடாகும். இவை இல்லையேல், மனிதன் என நாம் காண்பது இருட்டறையில் உழலும் ஒரு பூச்சியே தவிர வேறில்லை.

செய்தித்துளிர்

ஆரோவில்லின் 54-ஆவது பிறந்தநாளினை முன்னிட்டு பிப்ரவரி 21 முதல் பிப்ரவரி 28 வரை சிறப்பாகத் தொடர்விழா நடைபெற்றது. ஆரோவில்லைச் சுற்றியுள்ள கிராம நாட்டாண்மைக்காரர்கள், பஞ்சாயத்துத் தலைவர்கள், உறுப்பினர்கள், கவுன்சிலர்கள் அனைவரையும் அழைத்துக் கௌரவித்தார்கள். ஆரோவில் நிறுவனச் செயலர் டாக்டர் திருமதி. ஜெயந்தி ரவி இ.ஆ.ப. அவர்களும், விழாக்குழுவினரும் மிகச்சிறப்பாக நிர்வகித்தார்கள். நல்உறவுகள் நிலைப்படுத்தப்பட்டன.

உலக மகளிர் தினத்தை முன்னிட்டு நமது மையத்தில் விழா கொண்டாடப்பட்டது. இதில் மகளிருக்கான பட்டிமண்டபம், யாத்ராகுழுவினரின் தப்பாட்டம், ஆரோசங்கமம் திரு. ராமலிங்கம் அவர்களின் வள்ளிமுருகப்பெருமான் பற்றிய திருப்புகழ் இசைவிருந்து ஆகிய நிகழ்ச்சிகள் நடைபெற்றன. நமது மையத்தின் மொழி ஆசிரியர் திரு. பா.ஆனந்து



அவர்கள் பெண்களை உயர்வு செய்யும் வண்ணம் பாராட்டிப் பேசினார். சித்த மருத்துவர் கே.பி.செல்வம், பேராசிரியர் சொ.சேதுபதி ஆகியோரின் சிறப்புரைகள் நிகழ்ந்தன. இளைஞர்கள், அருள்வழி, மோகனம், ஒளிப் பள்ளி, கோஃபு, ஆரோசங்கமம், யாத்ரா முதலிய நிறுவனங்களிலிருந்து பிரதிநிதிகள் கலந்துகொண்டனர். உக்ரைன் – ரஷ்யா யுத்தம் தவிர்க்கப்பட்டு அமைதி திரும்ப கூட்டுவழிபாடு நடந்தது.

கணபதிசெட்டிகுளம் சுவாமி விவேகானந்தா கிராம சமுதாயக் கல்லூரியில் “உலக மகளிர் தின” விழா கொண்டாடப்பட்டது. நர்சிங் பயிற்சி முடித்துச்செல்லும் செவிலியர்கள் பிளாரன்ஸ் நைட்டிங்கேலின் உறுதி மொழிப் பிரமாணம் எடுத்தனர். கவிஞர் இரா.மீனாட்சி மகளிர்தினச் சிறப்புரை வழங்கினார். திருமதி அனுராதா சுப்பிரமணியன் முன்னிலை வகித்தார். பிளாரன்ஸ் நைட்டிங்கேல் அம்மையார் பற்றிய ஆவணப்படம் காட்டப்பெற்றது சிறப்பு.



**அன்புத் தவம்**
**அறிவுத் தவம்**
**ஆற்றல் தவம்**
**அழகுத் தவம்**

## அறிவோம் நம் தமிழ் - I

### தமிழில் பழந்தமிழ்க் கலைச்சொற்கள்

CONFUSION

அதனி, குழுமல், கோழம்பம்
கல்லல், துருக்கம், சவலை
மயக்கம், கொந்தளம்,
கூழ், துளக்கம், தெருமரல்
துயவு, துயக்கு, புரளி
பக்கறை, மயல்
மனக்குழப்பம், குழம்பியநிலை.

DISTRESS

நொய்வு, நொவ்வி, நோய்
நோவு, படர், உறுகண்
தெறு, உறுவல், உயவல்
விம்மல், புன்கண், பிறந்தை
பீடிப்பு, பீழை, புகை, பனி
பேதுறவு, பைதல், பையாப்பு
பையுள், பொல்லாப்பு, பரிவு
பழங்கண், நடலை, நலிவு
குமை, கையாறு, கையறுநிலை
கோடரவம், இடும்பை,
மனக்கலக்கம், தாழ்வு.

நன்றி; ஆங்கில - தமிழ் வகுப்பிற்குப் பயன்பட்ட அகராதி.
International Advanced Deluxe Dictionary.

## ஊக்கம்

சிறுவர் இலக்கியம்

**ஊக்கம் கொண்டவன் முயற்சி செய்யும்**
**ஒவ்வொரு செயலும் வெற்றியடா.**
**காக்கும் கடவுள் தடுத்தாலும்**
**கடமை வீரன் வென்றிடுவான்.**
**உயர்ந்த மலையும் கடுகாகும்**
**ஊக்க முள்ளவன் முன்னாலே**
**அயர்ந்து நிற்பவன் உள்ளத்தில்**
**அணுவும் பெரிதாய்த் தோன்றுமடா.**

நாரா நாச்சியப்பன்

## தனிச்சுற்றுக்கு மட்டும்

வெளியீடு : ஆசிரியர் குழு
ஆரோவில் செய்திமடல்
இளைஞர்கள் கல்வி மையம்
ஆரோவில் - 605101
விழுப்புரம் மாவட்டம்
தமிழ்நாடு

Unit of Sri Aurobindo International Institute of Educational Research

மின்னஞ்சல் : tamil@auroville.org.in
தொலைபேசி : 0413-2623773
ஆசிரியர் : இரா.மீனாட்சி
வடிவமைப்பு : சொ.அருணன், புதுவை.
அச்சு : சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ், சிவகாசி.